# 7

# “யாருக்கும் நான் தேவையில்லே–ஜோ”

“கம்பனி லா” புத்தகத்திலிருந்து முக்கியமான குறிப்புகளை எடுத்துக்கொண்டிருந்த புஷ்பா தலை நிமிர்ந்தாள்.

“என்ன வேலாயுதம்?”

“கார்லே, முன்பக்க டயர் பஞ்சர் ஆயிருக்குங்க...”

“பஞ்சர்–ஆ? இல்லே, காத்து இறங்கி இருக்குதா?”

“பஞ்சர்தான்...ஆணி அடிச்சிருக்கு...”

“சரி; டயரை மாத்திடு”

“மாத்திட்டேங்க...போய் பஞ்சர் ஒட்டிட்டு வந்திடவா?”

புஷ்பா கடிகாரத்தைப் பார்த்தாள்.

அது எட்டே கால் என்றது.

“சுருக்கப் போயிட்டு வந்திடு வேலாயுதம்...பத்து மணிக்குள்ள ஹாஸ்பிடல்லே இருக்கணும். ஐயா இன்னிக்கு டிஸ்சார்ஜ் ஆகி வீட்டுக்கு வரார்...”

“உடனே வந்திடறேங்க...”

இரண்டடி வைத்தவனை “வேலாயுதம்” என்று அழைத்து நிறுத்தினாள்.

“ஐயாவைப் பார்த்ததும் ‘என்னங்க, எப்படி இருக்கீங்க? உடம்பு தேவலையா’–அப்படி இப்படினு எதுவும் கேட்காதே. சாதாரணமா இரு என்ன?”

“சரிங்க”

அவன் கிளம்பிப் போனதும் புஷ்பா டெலிபோனிடம் சென்று நம்பர்களைச் சுழற்றினாள்.

"ஹலோ, சாத்தப்பன்?"

"எஸ்?"

"புஷ்பா பேசறேன்...குட்மார்னிங். வேலையா இருக்கீங்களா? தொந்தரவு செய்யறேனா?"

"ஒண்ணும் இல்லே...சொல்லுங்க...என்ன விஷயம்?"

"நேத்து எம்.டி. கிட்ட பேசிட்டு இருந்தப்போ ஒரு கேஸ் விஷயமா சில சந்தேகங்கள் கேட்டார். குறிச்சி வைச்சிருக்கேன். நீங்க ஆபீஸ் போறப்ப அதை வாங்கிகிட்டுப் போயி அவர்கிட்ட கொடுத்திட முடியுமா, ப்ளீஸ்?"

"ஷ்யூர்...ஒன்பதரைக்கு வரட்டுமா?"

"கொஞ்சம் முன்னால வாங்களேன்...ஒன்பதரைக்கு ஹாஸ்பிடலுக்குக் கிளம்பிடுவேன். குமார் இன்னிக்கு டிஸ்சார்ஜ் ஆகறார்..."

"தெரியும்...இன்னும் ஒரு வாரத்துக்கு நீங்க லீவுனு எம்.டி. சொன்னார்...வந்து...தப்பா எடுத்துக்க மாட்டீங்கனு நினைக்கறேன். இப்ப குமார் எப்படி இருக்கார், புஷ்பா?"

"இதுலே தப்பா எடுத்துக்க என்ன இருக்கு சாத்தப்பன். நீங்க அவர் நலன்லே அக்கறை கொண்டவர்னு எனக்குத் தெரியாதா? நாலு வாரத்துக்கு முன்னே இருந்த குமார் இல்லே, இப்ப அவர்...ரொம்பப் போராடி தன்னை மாத்திக்கிட்டு இருக்கார்...முதல் ரெண்டு வாரம் தானும் அவஸ்தைப்பட்டு, பிறத்தியாரையும் கஷ்டப்படுத்தினார். ஆனால் அப்புறம் கண்ட்ரோலுக்கு வந்திட்டார். டாக்டர் நம்பிக்கையோட பேசறார்...பச்சைக் குழந்தை மாதிரி அவரைப் பாதுகாத்து எப்படியாவது கரை ஏத்திடணும்னு நானும் கங்கணம் கட்டிக்கிட்டு இருக்கேன்..."

"எதுக்கும் கவலைப்படாதீங்க புஷ்பா...இனிமே எல்லாம் நல்லபடியாதான் நடக்கும்...காட் ஈஸ் க்ரேட்..."

"தாங்ஸ் சாத்தப்பன். நானும் அப்படித்தான் நம்பறேன்..."

ரிஸீவரை வைத்தவள் கண்களை மூடிக்கொண்டு அரை நிமிஷம் அப்படியே உட்கார்ந்திருந்தாள். பின், மெதுவாக எழுந்து புத்தகங்களை அடுக்கி அதன் இடத்தில் வைத்துவிட்டு, மாடிக்குப் போனாள்.

வலது பக்கம் திரும்பியதும் இருந்த முதல் அறை குமாரின் வருகைக்காகப் புதுசாய் மேக்கப் அணிந்து காத்திருந்தது.

நடுவில் கட்டில். அந்தப் பக்கம் ட்ரெஸ்ஸிங் டேபிள். வாட்ரோப். இந்தப் பக்கம் காஸட் டேப் டெக், ஆம்ப்ளிஃபையர், நேர் எதிரில் உயரத்தில் சற்று விலகி பொருத்தப்பட்ட ஸ்பீக்கர்கள், கர்நாடக சங்கீத டேப்புகள். ஸ்வாமி சின்மயானந்தரின் கீதை உபன்யாசங்கள். புத்தக அலமாரியில் ஜே. கிருஷ்ணமூர்த்தி, ரஸ்ஸல், மகாத்மாகாந்தி, விவேகானந்தர்—கூடவே சில சட்ட புத்தகங்கள்.

பால்கனியின் கதவைத் திறந்துகொண்டு வெளியில் வந்தால் தோட்டம் காலுக்குக் கீழ் மந்தஹாஸமாய் சிரித்தது.

"அவருக்கு இது ஒரு புது பிறவி, மிஸஸ் குமார். அதை எப்போதும் நினைவுலே வைச்சிக்கங்க...எந்தக் காரணத்தைக் கொண்டும் அவர்கிட்ட சண்டை போடாதீங்க, யாரையும் போட விடாதீங்க, வாக்குவாதம் பண்ணக்கூடிய சந்தர்ப்பங்கள் எழுந்தாக் கூட, எப்படியாவது தவிர்த்திடுங்க...பழசை ஞாபகப்படுத்தற எந்தப் பேச்சும் வேணாம்...அவர் மனசும், உடம்பும் இன்னும் ரொம்ப பூஞ்சையாத்தான் இருக்கு, அதனால கூடுமான வரையில் இதமான சூழ்நிலையை வீட்டுலே உண்டாக்குங்க... அவருக்குப் பிடிச்ச சமாசாரமெல்லாம் கைக்கெட்டுற மாதிரி இருக்கும்படி அறையை தயார் பண்ணுங்க... காற்றோட்டமான, வெளிச்சமான அறை ரொம்ப முக்கியம். அதுக்குள்ளே நுழைஞ்ச உடனேயே 'அப்பாடி'னு மிஸ்டர் குமார் ரிலாக்ஸ் பண்ணற மாதிரி அது இருக்கணும்..."

அப்படித்தானே இருக்கிறது?

குமாருக்குப் பிடிக்கும் சங்கீதம், ரசிக்கும் எழுத்துக்கள்...

தெருவிலிருந்து உள்ளடங்கி தோட்டத்தின் முகத்தில் விழிக்கும் பால்கனி...

இன்னும் ஏதாவது குறைகிறதா?

ஏதாவது? ஏதாவது?

ம்ஹூம்...

பார்த்த வரைக்கும் எல்லாம் திருப்திகரமாக இருக்க, கதவை சாத்திக்கொண்டு வெளியில் வந்தவள், மாடிப்படிக்கு அந்தப் பக்கம் இருந்த அறைக்குள் நுழைந்தாள்.

ஷூவின் லேஸ்களை முடிந்துகொண்டிருந்த சுஷ்மா இவளைக் கண்டதும் தலையைத் தூக்கி 'ஹாய் மாம்' என்றாள்.

"கிளம்பிட்டியா சுஷ்மி?"

"நாழியாச்சு...பஸ் வந்திடுமேம்மா."

எழுந்தவளின் புத்தகப் பையை எடுத்துக்கொண்டு புஷ்பாவும் கிளம்பினாள்.

மாடிப்படி வளைவில் சுஷ்மா கொஞ்சம் தயங்கினாள்.

"என்ன சுஷ்மி?"

"வந்தும்மா... இன்னிக்குதானே அப்பா வீட்டுக்கு வரார்?"

"ம்... ம்"

"வந்தும்மா... நேத்து என் ஃப்ரெண்ட் மேனகா எல்லார் நடுவுலேயும் 'உங்க அப்பா ஹாஸ்பிடல்லியா இருக்கார்?'னு கேட்டா, 'ஆமாம்'னேன். 'என்ன உடம்பு'ன்னா... 'வயித்து வலி'னு சொன்னேன். ஏளனமா சிரிச்சு 'வயித்து வலிக்கு சைக்கியாட்ரிஸ்டா வைத்தியம் பண்ணுவார்?'னு கேட்டாம்மா...எனக்கு ரொம்ப அவமானமா போச்சும்மா..."

புஷ்பா பெண்ணின் நெற்றியில் வந்து விழுந்த முடிக் கற்றையை ஒதுக்கிவிட்டாள். மெதுவாகப் பேசினாள்.

"கண் சரியில்லேன்னா கண்டாக்டர் கிட்ட போறோம்... ஹார்ட் சரியில்லேன்னா ஹார்ட் ஸ்பெஷலிஸ்ட் கிட்ட போறோம் இல்லியா? அது மாதிரி மனசு சரியில்லேன்னா, சைக்கியாட்ரிஸ்ட் கிட்டப் போய் சரி பண்ணிக்கிறதுலே என்னம்மா தப்பு. இதுலே அவமானப்பட என்ன இருக்கு? ம்? மேனகா சிரிச்சா, அவ அசட்டுப் பேச்சைக் கேட்டு நீயும் பதிலுக்குச் சிரிக்கிறதை விட்டுட்டு வீணா ஏம்மா வேதனைப்படறே? ம்?"

"வந்து...வந்து... நிஜமாகவே அவர் கம்ப்ளீட்டா நல்லா ஆயிட்டாராம்மா?"

"பூரணமா குணமாயிட்டார் டார்லிங்..."

"அப்படின்னா இனிமே அவர் முன்னே மாதிரி கத்த மாட்டார், உங்க கூட சண்டை போட மாட்டாராம்மா?"

உடனே பதில் சொல்லாமல் புஷ்பா மகளை நெருங்கி அணைத்துக்கொண்டாள். நெற்றியில் முத்தமிட்டாள்.

"அப்பா இனிமே ஒரு புது அப்பாவா இருப்பார் சுஷ்மி... எதை நினைச்சும் அவஸ்தைப்படாம, ஸ்கூலுக்குப் புறப்படும்மா... ப்ரேக்ஃபாஸ்ட் சாப்பிட உட்காரு, நான் அண்ணாவை அழைச் சிட்டு வரேன்..."

கீழே வந்து பெண்ணை டைனிங் ஹாலுக்கு அனுப்பிவிட்டு, அவள் முன்னறைக்குப் போனாள்.

குளித்த ஈரத்தலையுடன் கண்ணாடிமுன் சுரேஷ் நின்றிருந் தான்.

"ப்ரேக்ஃபாஸ்ட் சாப்பிட வரியா சுரேஷ்?"

"ஒரு நிமிஷம்மா"

அவன் தலைவாரி, பாண்ட் அணியும் வரை மௌனித்து புஷ்பா மெதுவாக "இன்னிக்கு வேணா காலேஜுக்கு நீ லீவு போடறியா சுரேஷ்?" என்றதும் அவன் சட்டென்று திரும்பி அவளைப் பார்த்தான்.

"ஹாஸ்பிடலுக்கு நீயும் வந்தா நல்லா இருக்குமோனு நினைச்சேன்."

சுரேஷ் அலமாரியிலிருந்து டீ ஷர்ட் ஒன்றை எடுத்து மாட்டிக் கொண்டான். கலைந்த முடியை ஒதுக்கிவிட்டுக் கொண்டான்.

"முக்கியமான கிளாஸ் இருக்கும்மா... பரவாயில்லை, 'கட்' பண்ணிட்டு வானு நீங்க சொன்னா, வரேன்..."

புஷ்பா கண்களைச் சிமிட்டாமல் பிள்ளையை ஏறிட்டாள்.

அப்பாவைக் கண்டு பதினோரு வயசுப் பெண் விவரம் புரியாமல் மிரண்டு ஒடுங்கினால், பதினேழு வயசுப் பிள்ளை விவரம் புரிந்து கசந்து ஒதுங்குகிறான்.

கூடுமானவரையில் பட்டுக்கொள்ள விரும்பாமல் தள்ளி நிற்க முயற்சிக்கிறான்...

கடவுளே!

இவர்கள் இருவரின் அபிப்ராயங்களையும் எவ்வாறு மாற்றப் போகிறேன்?

என் முயற்சிக்கு இனியாவது குமாரின் ஒத்துழைப்பு இருக்குமா?

"அம்மா..."

புஷ்பா சின்னதாகப் புன்னகைத்தாள்.

“இட் ஈஸ் ஆல்ரைட் சுரேஷ். க்ளாஸைக் கட் பண்ணிட்டு நீ வரவேணாம்...வா, சுஷ்மா காத்திட்டிருக்கா...... ப்ரேக்ஃபாஸ்ட் சாப்பிடப் போலாம்...”

கிளம்பினவளின் கையை சுரேஷ் பற்றினான்.

“உங்களுக்குக் கோபம் இல்லியேம்மா?”

“ச்சே...இதுலே என்னப்பா கோபம்?” மீண்டும் புன்னகைக்க முயற்சித்த புஷ்பா மகனின் தோளில் கை வைத்தாள்.

“சுரேஷ்”

“என்னம்மா?”

“நேத்துகூட அப்பா கேட்டார், சுரேஷ் ஏன் என்னைப் பார்க்க வரவேயில்லேனு...”

“..................”

“என்ன இருந்தாலும் அவர் உன் அப்பா இல்லியா? அவர் மேல இத்தனை கோபமா நீ இருக்கலாமாப்பா?”

“கோபம் இல்லேம்மா... நிச்சயமா இல்லே... ஆனாலும் ஏனோ என்னால அவர்கிட்ட ஒட்டிக்கவே முடியலை. நினைவு தெரிஞ்ச நாளா அவரோட அட்டஹாஸங்களைப் பார்த்து, கேட்டு, வெறுத்துப் போயிட்டதுலே, மரியாதையும் அன்பும் இருக்கிற மாதிரி வேஷம் போட முடியலைம்மா... ஐ'ம் ஸாரி...”

மகனின் தோளில் வைத்திருந்த கை நடுங்கியது.

“அவர் எதையுமே சுய உணர்வோட பேசலை, செய்யலை சுரேஷ்... ப்ளீஸ் அண்டர்ஸ்டாண்ட்... புது மனுஷரா அப்பா இப்ப வீட்டுக்கு வாறப்போ, நாம எல்லாரும் அதிக அனுசரணையோட இருந்தாதான் நல்ல பலன் இருக்கும்னு டாக்டர் சொல்றார்ப்பா...”

சுரேஷ் அம்மாவை தோளோடு சேர்த்து அணைத்துக் கொண்டான்.

“என்னால எந்தத் தொந்தரவும் அவருக்கு இருக்காதும்மா... ஐ ப்ராமிஸ் யூ தட்... எதுக்கும் ஆர்க்யூ பண்ணலை, உங்களை ஏதாவது சொன்னாக்கூட வரிஞ்சி கட்டிகிட்டு ஸப்போர்ட் பண்ணலை. பட்டுக்காம விலகியே இருக்கேன். போதுமா?”

*தீர்மானமாக மகன் பேச, வளர்ந்துவிட்ட பையனிடம் தொடர்ந்து என்ன பேசுவது என்று புரியாமல் புஷ்பா பெருமூச்சு விட்டாள்.*

*டிபன் சாப்பிட்டுவிட்டுக் குழந்தைகள் புறப்பட்டார்கள்.*

*சாத்தப்பன் வருகைக்காகக் காத்திருந்த நிமிஷத்தில் வாசல் நாற்காலியில் சாய்ந்து உட்கார்ந்து தலையைக் கையால் தாங்கிப் பிடித்துக்கொண்டாள்.*

*ரொம்ப ஆயாசமாக இருந்தது.*

*காலும் கையும் வெலவெலவென்று பலஹீனமாய் இருந்தன. பயத்தில் மிரளும் பெண்...*

*வெறுப்பில் ஒதுங்கும் பிள்ளை...*

*கோபத்தை விட மறுக்கும் தகப்பன்.*

*மாமனாரின் நினைவு வந்ததும், கூடவே நாலு நாட்கள் முன் அவர் ஊரிலிருந்து வந்திருந்தபோது நடந்த பேச்சும், மனசுள் எட்டிப் பார்த்தது.*

*"வர்ற திங்கட்கிழமை அவரை வீட்டுக்கு அழைச்சிட்டு வந்திடலாம்னு டாக்டர் சொல்லிட்டார் மாமா..."*

*"ம்"*

*"அவர் ரொம்ப மாறிட்டார் மாமா... முன்னே மாதிரி இல்லே... பார்த்தா நீங்களே ஆச்சர்யப்படுவீங்க!"*

*"ப்ச்... என்ன ஆச்சர்யம், நாலு நாள் ஒழுங்காக இருக்கப் போறானோ இல்லே அதுகூட இல்லியோ..."*

*"ஒரேடியா ஒதுக்கிட்டா எப்படி மாமா... டாக்டர் நம்பிக்கையோடு இருக்குறப்ப, நாமளும் அதை நம்ப வேண்டாமா?"*

*"நீ வேணா நம்பிக்கம்மா... எனக்கு அவன் மேல கடுகத்தனை நம்பிக்கை இல்லே... பெண்டாட்டி தலையிலே அத்தனை பொறுப்பையும் சுமத்திட்டு, சீரழிஞ்ச இவனும் ஒரு ஆம்பிளை!"*

*"இப்படி நொந்து போய் அவர் முன்னால எதையும் பேசிடாதீங்க... அது அவரை ரொம்பப் பாதிக்கும் மாமா"*

*"நான் அவனைப் பார்க்க வந்தாதானேம்மா பேச்சும் பாதிப்பும்? அவனைப் பார்க்கவே எனக்குப் பிடிக்கலியே."*

இப்போது யோசிக்கையில் மாமா வராமல் இருப்பது கூட நல்லதுக்குத்தான் என்று புஷ்பாவுக்குத் தோன்றியது.

கொஞ்ச நாளைக்காவது குமாரைப் பத்திரமாகப் பாதுகாத்து விட்டால், எந்தப் பாதிப்பும் இல்லாமல் இருக்க, யாரையும் அதிகம் நெருங்கவிடாமல் செய்துவிட்டால் அப்புறம் கவலை இல்லையோ?

சாத்தப்பன் வந்து அலுவலகத் தாள்களை வாங்கிக் கொண்டு புறப்பட, புஷ்பா தானும் கிளம்பினாள்.

முதல் நாள் பாங்கிலிருந்து ட்ரா பண்ணி வைத்திருந்த பணத்தையும், டேபிள் மேல் ஃப்ளாஸ்கில் தாயாரம்மா குமாருக் காகப் போட்டு வைத்திருந்த காபியையும் எடுத்துக்கொண்டாள்.

"தாயாரம்மா, நான் கிளம்பறேன்"

"மகராசியா போயிட்டு, புருஷனோட வாம்மா"

இருபது வருஷங்களுக்கும் மேலாய் அந்த வீட்டில் இருக்கும் ஸ்வாதீனத்தில், குமாருக்குப் புஷ்பா அறிமுகம் ஆவதற்கு முன்பிருந்தே அவனை அறிந்தவள் என்ற உரிமையில், வீட்டுக்குப் பெரியவளாய் தாயாரம்மா கண்கள் கலங்கிப் பேச, புஷ்பா நின்றாள்.

"தாயாரம்மா..."

"என்னம்மா?"

"நீங்க தப்பா எடுக்கக் கூடாது. ஆனாலும் டாக்டர் சொல்லச் சொல்லி இருக்குறதால நான் அதைச் சொல்றேன். அவர் வந்தப்புறம் இப்படி அழுது, புலம்பி எதுவும் பண்ணாதீங்க... அவரோட பழைய நடவடிக்கைகள் குறிச்சு எதுவும் பேசாதீங்க. சாதாரணமா, எதுவும் நடக்காத மாதிரி இயல்பாக இருங்க. இப்படி நாம அழுது பேசிச் செய்தா, அவங்களுக்குக் குத்தஉணர்ச்சி வந்திடுமாம்... அது நல்லதில்லைனு டாக்டர் சொன்னார், என்ன தாயாரம்மா?"

"நான் ஏம்மா வேண்டாத பேச்சைப் பேசப் போறேன்? நீங்க ரெண்டு பேரும் சந்தோஷமா இருக்கணும். அதான் எனக்கு வேணும்."

காரில் போகும்போது பூதாகரமாய் உருவான பயம் நெஞ்சில் காலால் ஓங்கிஓங்கி விடாமல் உதைத்தது.

அடிவயிற்றை என்னமோ ணக்ணக்கென்று கிள்ளியது.

எச்சில் கூட்டி விழுங்கினால் தொண்டை வலித்தது.

சரியாக இருக்குமா?

இனியாவது எல்லாம் சரியாக இருக்குமா?

பத்தொன்பது வருஷங்களுக்கு முன்னால், லா காலேஜில் ஒன்றாகப் படித்த சமயத்தில் சிரிப்பும் துள்ளலும் அன்பும் கரிசனையுமாய் வளைய வந்த குமார் ஹிருதயத்தில் இனிமையாய் படர்ந்தான்.

ஹோ! எத்தனை அற்புதமான நாட்கள் அவை?

சட்டக் கல்லூரியில் படிக்கையில் ஜனித்த காதல்.

பெரியவர்களின் ஆசியோடு நடந்த திருமணம்.

அவரவர் மனசுக்குப் பிடித்தமான ரீதியில் அமைந்த வேலைகள்.

ஒன்றாக எழுந்து, சாப்பிட்டு, ஆபீஸ் சென்று வெளியில் வாசலில் போய் பார்ட்டிகளில் பங்கெடுத்து...

அங்குதானே எப்படியோ தவறு நடந்துவிட்டது!

கூடவே இருக்கையில் குமாருக்குள் மட்டும் எப்படி அந்த அசுரன் புகுந்துகொண்டான்?

புக இவள் எப்படி அனுமதித்தாள்?

பிள்ளை பிறந்ததும் வேலையிலிருந்து நாலு வருஷம் ஓய்வு எடுத்துக்கொண்டு விட்டதாலா?

மனைவி, தாய் என்ற ஹோதாவில் வீட்டைக் கவனிக்கிறேன், பிள்ளையைப் பேணுகிறேன் என்று அவனுக்குச் சரியாக வெளியில் சுற்றாமல் ஒதுங்கி விட்டதாலா?

இல்லை, என் குமார்—அப்பழுக்கற்றவர், அப்பட்டமான ஆண்—என்று திமிராய் அலட்சியமாய் இருந்து விட்டதாலா?

எதனால்? ஐயோ, எதனால்?

காரணம் எதுவானாலும்—என்னவெல்லாம் நடந்துவிட்டன.

சாதாரணமாய் குடிக்கத் துவங்கியவன், மடாக் குடியனாகி, சண்டைக்காரனாகி, சுயநலவாதியாகி, மனிதாபிமானம், அனுசரிப்பு, புத்திசாலித்தனம் அத்தனையும் இழந்து, குழந்தைகள்

வேண்டாம், மனைவி வேண்டாம், வீடு வேலை பொறுப்பு என்று எதுவும் வேண்டாம் என்று ஆகி, தூங்கும் நேரம் தவிர பாக்கிப் பொழுதெல்லாம் குடியில் அமிழ்ந்து, சிரிப்பாய் சிரித்து, வேலை இழந்து, மதிப்பு இழந்து, மானம் இழந்து... இன்னும்... இன்னும்...

நோ... நோ... நோ... வேண்டாம். அந்த நினைவுகள் வேண்டாம்... சத்தியமாய் வேண்டாம்.

அந்தக் குமாரின் ஞாபகமே வேண்டாம்...

இன்றைய குமாரை நினைக்கலாம்...

புண்ணியமோ, நல்லகாலமோ... டாக்டர் ரெட்டியின் கிளினிக்கில் சேர்த்து தன்னைச் சரியாக்கிக் கொள்ள, அல்ல, அல்ல, மஹா சித்ரவதை அனுபவித்தாவது புதுப்பிறவி எடுக்க முன்வந்திருக்கும் குமாரை நினைக்கலாம்.

நாலு வாரங்களாக ஏக அவஸ்தைக்குள்ளாகி, அத்தனையும் என் மனைவிக்காக, குழந்தைகளுக்காக, பொறுத்துக் கொள்வேன் என்று பிடிவாதமாய் மீண்டு வந்திருக்கும் குமாரை நினைக்கலாம்...

இவர் குணமாகி விட்டார்; இனி புது வாழ்க்கை வாழ்வது இவருக்கு சாத்தியம்—என்று டாக்டர் உறுதியாய் சொல்லிவிட்ட குமாரை நினைக்கலாம்:

குமார், குமார், குமார், குமார், குமார், குமார், குமார், குமார்.

கு...மா......ர்

குமார் எழுந்தான். உட்கார்ந்தான். நகத்தைக் கடித்தான். இருப்புக்கொள்ளாமல் தவித்தான்.

சரியாகி விட்டதா?

இனி என்ன ஆனாலும் கோணலாகாத தினுசில் சரியாகி விட்டதா?

குடி என்றால் மனசு பறக்காதா?

நாவில் நீர் ஊறாதா?

கைகள் நடுங்காதா?

பார்வை மங்காதா?

மூளை மந்திக்காதா?

பின்மண்டையில் மரங்கொத்தி கொத்தாதா?

நிஜமாகவா? நிச்சயமாகவா?

நிஜமாகத்தான்... நிச்சயமாகத்தான்...

டாக்டர் சொல்லிவிட்டார்.

இன்னும் அரைமணியில் புஷ்பா வந்துவிடுவாள்.

புது குமாராக வாழ்க்கை நடத்தப் புறப்படப் போகிறேன்.

புது குமாராக... புத்தம் புது குமாராக... இருபது வருஷங்களுக்கு முன் இருந்த குமாராக...

புஷ்பா... என் புஷ்பா...

என்னால் எத்தனை கஷ்டங்களை நீ அனுபவித்திருக்கிறாய்! எத்தனை அவமானங்களைச் சுமந்திருக்கிறாய்? எத்தனை கசப்பை ருசித்திருக்கிறாய்?

என்னவளே....

இனி அத்தனைக்கும் சேர்த்து வைத்து உனக்கு ஒரு அற்புதமான வாழ்க்கையை நான் சிருஷ்டித்துத் தரப் போகிறேன்.

ஐ ப்ராமிஸ் யு மை லவ்...

சுரேஷ், சுஷ்மா பெருமைப்படும் தகப்பனாக வாழ்ந்து காட்டப் போகிறேன்.

பள்ளி, கல்லூரிக்குக் கொண்டுவிடுவதில் துவங்கி அத்தனை பொறுப்புகளையும், செவ்வனே செய்வேன். பாடம் சொல்லிக் கொடுப்பேன், சுரேஷ் ப்ரமாதமாக டென்னிஸ் விளையாடுவான். அவனோடு தினமும் மாலையில் விளையாடி அவனை சிறந்த டென்னிஸ் வீரனாக ஆக்குவேன். வேலையில் புலியாய் இருப்பேன். வயசான காலத்தில் முடியாமல் நிலங்களை மேற்பார்வையிடும் அப்பாவுக்கு ஓய்வு கொடுப்பேன். நவீன உத்தியில் பண்ணையை விஸ்தரிப்பேன்...

ஆஹா—ஆஹா என்று ஊராரும், உற்றாரும் வியக்க வளர்ந்து, நிமிர்ந்து வாழ்ந்து காட்டுவேன்.

அப்புறம்...அப்புறம்...

புஷ்பா வந்து விட்டாள். டாக்டர் கூறின அறிவுரைகளைக் கண்டிப்பாகக் கடைபிடிப்போம் என்று கூறிவிட்டு அவர்கள் வெளியில் வந்தார்கள்.

வானமும், நிலமும், பூவும், தென்றலும் தனக்காகவே உற்பத்தி ஆகி இருக்கின்ற உணர்வோடு குமார் காரில் அமர்ந்தான்.

மனைவியின் கையைப் பற்றிக்கொண்டான். ஆசையுடன் அமுக்கினான். வாயில் வைத்து முத்தமிட்டான்.

ஐ லவ் யூ– என்றான்.

வீட்டுக்கு வந்தார்கள்.

வீடும் தோட்டமும்கூடப் புதுசாக இருக்கிற மாதிரி குமாருக்குத் தோன்றின.

வெட்டி விடப்பட்ட பச்சைப் புல், பூத்து ஆடிய விருட்சி புதர்கள், வா வா என கை அசைத்த போகன்வில்லாக்கள்.

வெள்ளையாய், கம்பீரமாய் நின்ற வீடு.

என் வீட்டுக்கு இத்தனை கம்பீரமா?

என் தோட்டத்துக்கு இத்தனை அழகா?

உள்ளே போனார்கள்.

'வாங்க தம்பி' என்று அழைத்து அவனை வரவேற்ற தாயாரம்மா புஷ்பாவுக்குத் தந்த வாக்கை மறந்து விசும்ப–

"நான்தான் சரியாயிட்டேனே தாயாரம்மா... எதுக்குக் கலங் கறீங்க?"

பதற்றத்துடன் பேசிய குமார், நடுங்கும் விரல்களை பாக்கெட்டில் விட்டு மறைத்தான்.

கூடத்தில் அமர்ந்து காபி அருந்தினார்கள்.

பழக்கத்தின் காரணமாய் கீழ்அறைக்குள் நுழையச் சென்றவனை புஷ்பா தடுத்து நிறுத்தினாள்.

"உங்க அறை இது இல்லே குமார்; மாடிக்கு மாத்திட்டேன்..."

"ஏன் புஷ்பா?"–கண்களை அகல விரித்தான்.

"மாடி அறை இன்னும் பெரிசா இருக்கேனுதான்..."

குமார் பார்வையைத் தழைத்தான்.

மனசுக்குள் பெருச்சாளி ஒன்று பிராண்டியது.

முன்னறையில் தோட்டத்துக்கு ஒரு கதவு இருப்பதும், முன்பெல்லாம் முக்கால்வாசி நாட்கள் பின்னிரவில், வீட்டில்

உள்ள அத்தனை பேரும் தூங்கின பிறகு, தன்னிடமுள்ள சாவியால் அந்தக் கதவைத் திறந்து உள்ளே வந்து படுத்ததும் விண்விண் என்ற பிராண்டலினூடே வலித்தது.

அந்த மாதிரி திருட்டுத்தனம் மீண்டும் செய்வேன் என்ற பயத்தில் புஷ்பா அறையை மாற்றிவிட்டாளா?

எதுவும் பேசாமல் மேலே போனான்.

பேண்டை அவிழ்த்து, லுங்கியை அணிந்ததும் படுக்கையில் படுத்தான்.

ரொம்ப அசதியாக இருந்தது.

தாகம் எடுத்தது.

'தாகம்' என்று சொன்னால் புஷ்பா தவறாக எடுத்துக் கொள்வாளோ என்று பேசாமல் இருந்தான்.

"பாட்டு போடட்டுமா குமார்? ஜேஸுதாஸ் டேப் போடவா?"

"இப்ப வேணாம் புஷ்பா..."

"டயர்டா இருக்கா?"

"ம்..."

"கொஞ்ச நேரம் தூங்குங்க, யு வில் ஃபீல் பெட்டர்"

தூங்கினான்.

எழுந்தபோது மணி பன்னிரண்டரை. மெதுவாகக் கீழே வந்தான்.

கூடத்தில் ட்ரைவருடன் புஷ்பா பேசிக்கொண்டிருந்தாள்.

"பாட்டரி செக்அப் பண்ணணும்னு சொன்னியே மவுண்ட் ரோடு போறப்ப செய்திடு... சாப்பிட்டுட்டு, டெலிபோன் பில்லைக் கட்டிட்டு, அதையும் பார்த்துகிட்டு வந்திடு என்ன?"

மாலையில் முதலில் பள்ளியிலிருந்து சுஷ்மா வீடு திரும்பினாள்.

"அப்பா வந்திட்டாராம்மா?"

"வந்தாச்சு, டார்லிங்... மாடிலே இருக்கார், போய்ப் பாரு..."

"எ...எனக்கு பயமா இருக்கு மம்மி..."

"ச்சி, அசடு...அப்பாகிட்ட என்ன பயம்?"

"நீங்களும் வாங்கம்மா... ப்ளீஸ்."

புடவைத் தலைப்பில் கையைச் சுற்றிக்கொண்டு மகள் பேச, அவள் தயக்கம் புரிந்து, தானும் மாடிக்கு கூடப் போனாள் புஷ்பா.

"அப்பாவுக்கு ஹலோ சொல்லு சுஷ்மி"

"ஹலோ"

"அப்பாகிட்ட போய் ஒரு கிஸ் குடும்மா..."

கொடுத்தாள்.

"இப்படி என் பக்கத்திலே உட்காரு சுஷ்மா" என்று குமார் சொன்னதைக் காதில் வாங்காமல் திரும்ப அம்மாவின் அருகில் வந்து நின்றாள்.

ஐந்து நிமிடங்கள் ஆகியும் அப்படியே விழித்துக் கொண்டு மகள் நிற்க 'சரி யூனிபார்மைக் கழட்டிட்டு, போய் டிபன் சாப்பிடம்மா" என்று அவளை புஷ்பா வெளியே அனுப்பி னாள்.

ஆறு மணி சுமாருக்கு சுரேஷ் வந்தான்.

அவன் வந்தபோது குமாரும் புஷ்பாவும் வாச லானில் இருந்தார்கள்.

"ஹலோ"

"ஹலோ"

"எப்படி இருக்கே சுரேஷ்?"

"...பைன்...ஹவ் ஆர் யூ?"

"ஓ...ஃபைன்..."

அவ்வளவுதான்.

அதற்கு மேல் என்ன பேசுவது என்று புரியாமல் அவர்கள் வானத்தையும், புல்லையும் பார்க்க புஷ்பா மௌனத்தை கலைத்தாள்.

"சுரேஷ், மிஸ்டர் வினாயகத்தை உனக்குத் தெரியும் இல்லே? அவர் நம்ப நுங்கம்பாக்கம் வீட்டை வாடகைக்கு எடுத்துக்கறேன்னு சொல்றார்; டிபன் சாப்டுட்டு, சாவியோட போய் அவருக்கு

வீட்டைக் காட்டிட்டு வந்துடறியா? வாடகை, ஆயிரத்து ஐநூறு, ரசீதை வேணா தனியா ரெண்டா பிரிச்சுத் தரேன்னு சொல்லி யிருக்கேன். நீயும் அதையே சொல்லு. என்னப்பா?"

சுரேஷ் தலை ஆட்டிவிட்டு உள்ளே போனான்.

"யார் இந்த வினாயகம்? புஷ்பா?"

"உங்களுக்கு அவரைத் தெரியாது குமார். எங்க கம்பனிலே அக்கௌண்டன்டா புதுசா ட்ரான்ஸ்பர் ஆகி வந்திருக்கார்... வரீங்களா? சுஷ்மாவக் கூட்டிகிட்டு ஒரு ட்ரைவ் போயிட்டு வரலாம்?"

கால் மணியில் மூவரும் பீச்சுக்குக் கிளம்பினார்கள். வரும் வழியில் தாஸ்ப்ரகாஷ் ஐஸ்கிரீம் சாப்பிட்டார்கள்.

இரவு சாப்பாடு ஆனதும், ரொம்ப நேரத்துக்கு சின்ம யானந்தாவின் கீதை விளக்கத்தைக் கேட்டுக்கொண்டிருந்து விட்டு இருவரும் உறங்கிப் போனார்கள்.

காலையில் எழுந்ததும் குமாரின் தவிப்பு கொஞ்சம் அடங்கின மாதிரி இருந்தது.

ஒன்றாக அமர்ந்து டிபன் சாப்பிட்டபோது சிரித்துப் பேசி, குழந்தைகளோடு ஈஷிக்கொள்ள அவன் ப்ரயத்தனம் எடுப்பதை புஷ்பாவால் புரிந்துகொள்ள முடிந்தது.

"இன்னிக்கு சாயங்காலம் சுருக்க வந்திடு சுரேஷ். ரெண்டு பேரும் ராஜா அண்ணாமலைபுரம் கிளப்புக்குப் போய் டென்னிஸ் ஆடலாம்... இனிமே தினமும் காலைல ஆறுக்கெல்லாம் எழுந்து போய்டலாம்— என்ன?"

சுரேஷ் பார்வையை நிமிர்த்தாமல் பேசினான்.

"ஸாரிப்பா...காலைல நான் தினமும் ஸ்விம்மிங் போறேன்..."

"ஸ்விம்மிங்கா? நீயா? அது எப்போலேந்து சுரேஷ்? டென்னிஸ்னா தானே உனக்குப் பிடிக்கும்?"

"அது முன்னே...நாட் நௌ... இப்ப எல்லாம் நான் அதிகமா நீச்சல் அடிக்கத்தான் விரும்பறேன்...'

நம்பமுடியாதவன்போல குமார் மனைவி பக்கம் திரும்பி னான்.

"ஹேய்—இவன் சொல்றதைப் பாரேன்—டென்னிஸ் எவ்வளவு நல்லா விளையாடுவான். காலேஜ் டீம்ல கூட இருந்தான்... அதை விட்டுட்டு...இப்ப..."

பேசிக்கொண்டே போனவனுக்கு திடுமென்று சில மாசங்களுக்கு முன், குடித்துவிட்டு வந்த ஒரு நாளில் சுரேஷ் படிக்காமல் டென்னிஸ் விளையாடுகிறான் என்ற கோபத்தில் ராக்கெட்டைப் பிடுங்கி உடைத்துப் போட்டது நினைவுக்கு வர... பேச்சு தடைப்பட்டது...

அதற்காகவா?

அந்தக் கோபத்திலா?

ஓ! காட்...

புஷ்பா இதமாக அவன் கையைப் பற்றினாள்.

"வளர்ற பசங்க... அடிக்கடி இன்ட்ரஸ்ட் மாறுறது சகஜம் தானே குமார்...விட்டுடுங்க...அவன் வராட்டி என்ன? நான் வரேன்... நாம ஆடலாம்."

மூன்றாம் நாள் மதியத் தூக்கத்துக்குப் பிறகு குமார் கீழே வந்தபோது அவனுடைய தகப்பனார் வந்திருந்தார்.

"எப்படி இருக்கே குமார்?"

"நல்லா இருக்கேன்ப்பா..."

"என்னமோ, இனிமேலாவது ஒழுங்கா நடந்துகிட்டு பெண்டாட்டி, குழந்தைகளோடு நிம்மதியா வாழ்ந்தா சரி..."

புஷ்பா அவசரமாகப் பேச்சை மாற்றினாள்.

"இந்த வருஷம் வேணா ஒரு ஏக்கர்லே குடமிளகாய் போட்டுப் பார்ப்பமா, மாமா? எனக்குத் தெரிஞ்சவர் ஒருத்தர் பூனாலேந்து புது வகை குடமிளகாய் விதை வாங்கி பயிர் பண்ண றார். ஏக்கருக்கு செலவு போக நல்ல லாபம் வருதுனு சொல்றார். நாலு மாசப் பயிர்தான்றதுலேயும் நமக்கு ஆதாயம் இருக்கு...திரும்ப உழுதிட்டு ஒரு போகம் நெல்லும் விதைக்கலாம்..."

அதன் பிறகு அப்பாவும் மனைவியும் தீவிரமாகப் பேசிக் கொண்ட பல விஷயங்கள் குமாருக்குப் புதுசாய் இருந்தன. புதிராய்க் கூட இருந்தன.

மாமனாருடன் பேசியபடியே பம்பு ரிப்பேர் செய்ய வந்த எலெக்ட்ரிஷியனை, தோட்டத்தில் மருந்து தெளிக்க வந்த நபரை, புஷ்பா கவனித்தாள்.

வேலாயுதத்தை அனுப்பி காருக்கு ரோட் டாக்ஸ் கட்டச் சொன்னாள்.

"நான் ஏதாவது செய்யட்டுமா?" என்று கேட்ட குமாரைப் பார்த்து அன்புடன் புன்னகைத்து— "நீங்க நிம்மதியா ரெஸ்ட் எடுங்க...எதுக்கும் சிரமப்படாம ரிலாக்ஸ் பண்ணுங்க" என்றாள்.

அந்த வாரம் முழுவதும் குமாரை விட்டு இந்தண்டை அந்தண்டை போகாமல் இருப்பதில் அவள் விழிப்புடன் இருந்தாள்.

பகல் எல்லாம் குமார் படித்தான். பாட்டு கேட்டான். சாப்பிட்டான், தூங்கின்னான், ஆண்டப்யூஸ் இதர மாத்திரைகளைப் போட்டுக் கொண்டான்.

மாலையில் மனைவி, குழந்தைகளுடன் டி.வி. பார்த்தான், சினிமா, ட்ராமா போனான். நிதானமாக நிம்மதியாக இருக்க முயற்சித்தான். ஆனாலும், அந்த திங்கட்கிழமை புஷ்பா வேலைக் குக் கிளம்பினபோது மட்டும், சின்னதாக காரணமே புரியாமல் அவனுள் உண்டாகியிருந்த தவிப்பு யாரோ விசிறிவிட்ட தினுசில் அதிகமாகிப் போயிற்று.

பத்து நாட்கள் சென்றபின் மெதுவாக புஷ்பாவிடம் சொன்னான்.

"நான் வேணுமானா எங்க ஆபீஸ் வரைக்கும் போயிட்டு வரட்டுமா புஷ்பா? எங்க ஜி.எம். கிட்டே..."

"அ...நானே சொல்லணும்னு இருந்தேன், மறந்திட்டேன். ரெண்டு வாரம் முன்னால் மிஸ்டர் தாமோதரன் போன் பண்ணி நீங்க எப்படி இருக்கீங்கனு கேட்டார். டிஸ்சார்ஜ் ஆகப் போறதைச் சொன்னேன்—ரொம்ப சந்தோஷப்பட்டுகிட்டார். 'புத்திசாலி, நல்லவன்—என்னமோ போறாத காலம், சோதனைக்கு உள்ளாகும் படி ஆயிடிச்சி'னு வாஸ்தவமா வருத்தப்பட்டார்..."

"நான் திரும்ப வேலைல ஜாயின் பண்ணறது பத்தி ஏதாவது சொன்னாரா புஷ்பா?"

'சொன்னாரே! ஒண்ணு ரெண்டு மாசம் போய், உடம்பு நல்லா தேறினதும் வேலைக்கு வரச் சொன்னார் குமார்..."

“ஒண்ணு ரெண்டு மாசமா? ஓ காட்! ஏன் அத்தனை தள்ளி?”

“உங்க வேலை உங்களுக்குத்தான்—னு கண்டிப்பா காத்திட்டிருக்குறப்போ ஏன் கவலைப்படறீங்க குமார்? ஒரு மாசம் ரிலாக்ஸ் பண்ணி, உடம்பைத் தேத்திகிட்டு வேலைக்குப் போறது தான் எனக்கும் சரினு படுது...”

குமார் பதில் பேசாமல் சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டான்.

வேலை வெட்டி இல்லாமல் தண்டச்சோறு தின்றுகொண்டு வீட்டில் உட்கார்ந்திருந்தால் உள்ளுக்குள் என்னமோ குடைகிறது புஷ்பா; விவரிக்கத் தெரியாமல் ஏதோ வேதனை வளர்கிறது புஷ்பா—என்று சொல்ல நினைத்தவன், வேண்டாம் என்று தீர்மானித்து சும்மா இருந்தான்.

மேற்கொண்டு நாலு நாட்கள் சென்றன.

அன்று தூங்கி எழுந்ததுமே உடம்பும், மனசும் என்னவோ போல்தான் இருந்தன.

வயிற்றில் ஒரு இரைச்சல்.

மனசில் ஒரு வெறுமை.

ராத்திரி ரொம்ப நேரத்துக்குத் தூங்காமல் புரண்டு கொண்டிருந்ததாலா?

இரண்டாவது காம்போஸ் போட்டுக்கொண்டும் தூக்கம் வராததோடு, சம்பந்தா, சம்பந்தம் இல்லாமல் கனவுகள் கண்டதாலா?

எழுந்தபோது மணி ஆறே முக்கால்.

பல் தேய்த்து முகம் கழுவி, கீழே போய் கூடத்தில் உட்கார்ந்ததும், தாயாரம்மா காபியை நீட்டினாள்.

“புஷ்பா எங்கே?”

“வேலையிருக்குனு, காலைலே கம்பனிக்கார்ல வெளியே போயிட்டாங்களே, தம்பி.”

ஓ. எஸ்— நாளைக்கு லேபர் லீடர்களுடன் பேச்சு இருக்கு. ஆறரைக்கு எம்.டி. வீட்டுக்குப் போயிட்டு, பேச வேண்டியதை எங்களுக்குள்ள தீர்மானம் பண்ணிகிட்டு, அங்கேயிருந்தே ஆபீஸ் போயிடுவோம்—என்று சொன்னாளே!

பேப்பரைப் பிரித்தான்.

புளியங்குடி, திண்டிவனம் கலவரங்கள்.

பீஹாரில் கொலை—கொள்ளை.

எங்கே போகிறது இந்த தேசம்?

காரசாரமாக இந்த நாட்டின் சீர்கோடுகளைப் பற்றிப் பேச எண்ணி, மகனின் அறைக்குள் நுழைந்து "இத பாத்தியா சுரேஷ்... இந்த புளியங்குடிலே..." என்று ஆரம்பித்ததும் அவன் "ஸாரிப்பா... இப்ப பேச நேரமில்லே... ஏற்கனவே நான் ஸ்விம்மிங்க்கு லேட்..." என்று திரும்பிகூடப் பார்க்காமல் பதில் சொல்லிவிட்டு, புஸ்தகங்கள், ஸ்விம் ஸூட், டவல் அடங்கின பை சகிதம் கூடத்துக்குப் போனான்.

"தாயாரம்மா—நான் வெளியே போறேன். அம்மா வந்து கேட்டா, ஸ்விம்மிங் போயிட்டு, நேரே காலேஜ் போயிடறேன்னு சொல்லுங்க..."

பேசியபடியே அவன் வெளியில் போக, பிள்ளையின் அலட்சியம் குமாரைச் சுர்ரென்று சுட்டது.

என்னிடம் விவரத்தைச் சொன்னால் என்ன?

அம்மா வந்தால் நான் சொல்ல மாட்டேனா?

லேசான எரிச்சலுடன் மீண்டும் ஹாலுக்கு வந்து அமர்ந்தான். எட்டுக்கு சுஷ்மா கீழே இறங்கி வந்தாள்.

"என்ன சுஷ்மா அதுக்குள்ளியா ஸ்கூலுக்குக் கிளம்பிட்டே?"

"இன்னிக்கு ஸ்கூல் பஸ் கிடையாதுப்பா. பப்ளிக் பஸ்லே போகணும், அதான் சுருக்க கிளம்பிட்டேன்"

குமார் அன்புடன் மகளிடம் வந்தான்.

"நீ ஏம்மா பஸ்ஸிலே போய் கஷ்டப்படணும். ஒரு நிமிஷம் இரு சட்டை போட்டுகிட்டு வந்து, கார்ல உன்னை நான் கொண்டு விடறேன்..."

அப்பாவா?

ஸ்கூலில் கொண்டுவிடப் போகிறாரா?

முன்பொரு தடவை ஆர்த்தியின் பிறந்த நாள் பார்ட்டிக்கு அழைத்துப் போகிறேன் என்று சொல்லி காரில் ஏற்றிக் கொண்டு, போகிற வழியில் 'கிளப்பில் ஒரு நிமிஷ வேலை இருக்கு' என்று

சொல்லி நிறுத்தி, ராத்திரி பத்து மணி வரை சின்னப் பெண் காரில் தனியாய் உட்கார்ந்திருப்பாளே என்ற எண்ணம் இல்லாமல் நண்பர்களுடன் குடித்துக்கொண்டு உட்கார்ந்திருந்து...

மாட்டேன்... திரும்ப இவருடன் தனியாய் நான் போக மாட்டேன்...

சுஷ்மா சட்டென்று மறுத்தாள்.

"வேண்டாம்பா... ஸ்கூல் பஸ் இல்லாத நாளிலே பப்ளிக் பஸ்லே போய் பழகிக்கணும்னு அம்மா சொல்லியிருக்காங்க... நான் பஸ்ஸிலேயே போறேன், தாயாரம்மா டிபன் கொடுங்க... நாழியாச்சி..."

பரபரப்பாய் சாப்பிட்டு, பையுடன் அவள் ஓட, அந்த பயத்துக்கு காரணம் புரியாமல் குமார் கொஞ்ச நேரம் அப்படியே அமர்ந்திருந்தான்.

மண்டை ஏகமாய் கனத்தது.

சிகரெட் பிடிக்க வேண்டும் போல் இருந்தது.

சிகரெட் இல்லை. இரவே பெட்டி காலி.

காரில் ஒரு ரவுண்ட் போய்விட்டு, அப்படியே நாலு பெட்டி சிகரெட் வாங்கிக்கொண்டு வந்தால் என்ன?

சட்டையை மாட்டிக்கொண்டு காரிடம் செல்ல, வேலாயுதம் தலையைச் சொறிந்துகொண்டு முன்னால் வந்தான்.

"ஒன்பது மணிக்குள்ள வண்டியை சர்வீஸுக்கு எடுத்திட்டுப் போக அம்மா சொல்லியிருக்காங்க..."

அட, சட்!

நமநம என்ற ஆத்திரத்துடன் அங்கேயே வராந்தா நாற்காலியில் உட்கார்ந்தான்.

அம்மா அதைச் சொல்லியிருக்காங்க...

அம்மா இதைச் சொல்லியிருக்காங்க...

எதற்கும் அம்மாதானா?

கோபத்தை அடக்கும் முயற்சியில் அவன் இருக்க, முண்டாசு கட்டின ஆசாமி ஒருவன் வாசலில் எட்டிப் பார்த்தான்.

"அம்மா இல்லிங்களா?"

“நீ யாரு?”

“பெரியய்யா பண்ணைலேந்து அனுப்பிச்சாருங்க...அம்மா கிட்ட இந்தக் கடுதாசியக் கொடுத்திட்டு ரெண்டாயிரம் ரூபா பணம் வாங்கிட்டு வரச் சொன்னாரு...”

திரும்ப அம்மாவா?

எல்லாருக்கும் அம்மாதான் தேவை என்றால் நான் ஒருத்தன் எதற்கு கல்லுகுண்டாய்?

திடுமென்று அவனுக்கு தொண்டை உலர்ந்து போன மாதிரி இருந்தது.

தாகம் எடுத்தது.

உள்ளங்கையில் வியர்வை ஊறியது.

மார்பு திடுக்கென்றது.

வயிறு உப்பிக்கொண்டதுபோலத் தோன்றியது.

“தாயாரம்மா...”

உரக்க அவன் குரல் கொடுக்க, அவள் என்னவோ, ஏதோ என்று வந்தாள்.

“என்ன தம்பி?”

“உள்ளே சோடா இருக்கா? இல்லாட்டி ஆறுமுகத்தை பெட்டிக் கடைக்கு அனுப்பி, ஒரு சோடா...”

அவன் முடிப்பதற்குள் தாயாரம்மா மிரண்டாள்.

“ஐய்யய்யோ...சோடாவா? வேணாம் தம்பி...திரும்ப சோடாவா? அதெல்லாம் கேட்டா கண்டிப்பா கொடுக்கக் கூடாதுனு அம்மா சொல்லியிருக்காங்க தம்பி...”

நீளமாய் அவள் புலம்ப; குமாருக்குள் ஒரு எரிமலை குமுறி வெடித்தது.

டாம் யூ ஆல்...

வேக்வேகென்று தன்னிரக்கம் கொப்பளிக்க, என்ன செய்கிறோம் என்று புரியாத வேகத்தில் மாடிக்கு ஓடினான். பர்ஸை எடுத்துக்கொண்டான். வாசலுக்கு வந்து கண்ணில் தெரிந்த முதல் டாக்ஸியைப் பிடித்து நிறுத்தினான். ‘ஜிம்கானா வுக்குப் போ’ என்றான்.

பாரில் உட்கார்ந்து ஆனந்தமாய் ஜில்பியர் குடித்துக் கொண்டிருந்த ஜோவும், சாந்திலாலும் இவன் வந்து நின்ற வேகத்தைப் பார்த்து திகைத்துப் போயினர்.

"பேரர்—ஸ்காட்ச் ஆன் ராக்ஸ்"

பணியாள் கொண்டுவந்து வைத்த விஸ்கியை யோசிக்காமல் உடனே எடுத்துக் குடித்ததும், வாயும் தொண்டையும் நெஞ்சும் எரிந்தன. அப்புறம் மணத்தன.

எதுவும் கேட்காமல், இவனைப் பார்த்தபடி அமர்ந்திருந்த நண்பர்கள் பக்கம் திரும்பி கெஞ்சலாக, "யாருக்குமே நான் தேவை இல்லே—ஜோ; யாருக்குமே என் மேல மரியாதை இல்லை; அப்புறம் நான் குடிச்சா என்ன குடிக்காட்டி என்ன?" என்று சொல்லிக்கொண்டே சப்தமில்லாமல் அழத்தொடங்கின அதே கணத்தில், நாலு வாரங்களாக சாப்பிட்டு வரும் ஆண்டிப்யூஸ் மாத்திரைக்கும், இப்போது யோசிக்காமல் அவசரத்துடன் விழுங்கிய விஸ்கிக்கும் அவன் வயிற்றுக்குள் பயங்கரமான த்வந்த யுத்தமும் ஆரம்பித்தது.

– ஆனந்த விகடன், 1982